# பகவத் பாதை




Bagavath Path

தனிச்சுற்றுக்கு மட்டும் இது ஒரு பகவத் மிஷன் வெளியீடு 15-11-2012




நம் மனோ இயக்கம், மெய்ப்பொருளை அறிய வேண்டுவது முக்கியமன்று. மாயையின்பிடி தளர வேண்டுவது தான் முக்கியம்.

– ஸ்ரீ பகவத்



## மாயையா? மெய்ப்பொருளா?

- ஸ்ரீ பகவத்

நாம் ஒரு சராசரி மனிதராக வாழ்ந்து மறைந்திடுவதில் எந்தச் சிறப்பும் கிடையாது.

வாழ்வில் நாம் ஒரு சாதனையாளராக மாறவேண்டும்; சாதித்துக் காட்டவேண்டும்.

ஆனால், நாம் எதனைச் செய்வது? எதனைச் சாதித்துக் காட்டுவது?

சாதாரண மனிதனாக, சாதாரண வாழ்க்கை வாழ்வதைவிட, ஆன்மிக வாழ்க்கை வாழ்ந்தால் எவ்வளவு சிறப்பாக இருக்கும்?

ஆன்மிக வாழ்விலும், இறைவனையோ, ஆன்மாவையோ அறிந்து அல்லது அடைந்து, வாழ்ந்திடுவோமானால், அந்த வாழ்க்கை எவ்வளவு சிறப்புடையதாக இருக்கும்?

ஆன்மிக சாஸ்திரங்களும், மகான்களின் உபதேசங்களும், மதத் தலைவர்களின் கருத்துக்களும் இதனையே வலியுறுத்திக் கூறுகின்றன.

உலக ஆசைகளிலும், சிற்றின்பங்களிலும் மூழ்கிக் கிடந்த நம்மையெல்லாம், அவர்களுடைய வழிகாட்டல்தான் வழிநடத்துகின்றன.

அவற்றைப் பின்பற்றி வாழ்ந்திடும் நம்முடைய வாழ்வும், அர்த்தம் உள்ளதாக அமைந்திடுகின்றது.

ஆன்மிக வாழ்வில் நுழைந்திடுவோரும் ஒரேயொரு பிரச்சினையை மட்டும் சந்திக்கின்றனர்.

நாம் வாழும் வாழ்க்கை, நல்ல வாழ்க்கை தான் என்றாலும்

அதில் எங்கேயோ, ஏதோ ஒரு நிறைவற்ற தன்மையும் அல்லவா இருப்பதாக தோன்றுகின்றது?

ஏன் இந்தத் தோற்றம்?

இது பற்றி நமது ஆன்மிக சாஸ்திரங்கள் என்ன சொல்லுகின்றன?

நமக்கு வழிகாட்ட வந்த ஆன்மிக சாஸ்திரங்கள், மெய்ப்பொருள் தத்துவத்தை இரண்டு வகையாகப் பிரிக்கின்றன.

ஒன்று மெய்ப்பொருள்; அடுத்தது மாயை.

ஒன்று பிரம்மம்; அடுத்தது பிரபஞ்சம்.

ஒன்று இறைவன்; அடுத்தது உயிர்கள்.

-இப்படி இரண்டாகப் பிரித்து விளக்கங்கள் கொடுக்கின்றன.

நாம் அறிய வேண்டுவதும், அடைய வேண்டுவதும் மாயையை அல்ல.

மெய்ப்பொருளைத்தேடி, மெய்ப்பொருளை அறிந்து, மெய்ப்பொருளைச் சேர்ந்திடுவதுதான் நமது கடமை.

ஆனால் நமது கடமையைத்தான் நம்மால் முழுமையாக நிறைவேற்றமுடியவில்லை.

"நான் யார்? நான் யார்? - என்று கேட்டு, உனக்குள்ளேயே நுழைந்து, உனது மூலத்தைப் பார்" என்று இரமண மகரிஷி கூறுகிறார்.

அதற்கு அன்பர் ஒருவர் கூறுகிறார். "நான் யார் என்று கேட்டுக் கொண்டிருந்தால் தூக்கம் வந்து விடுகிறது சுவாமி! நான் யார் என்பதற்குப் பதில், 'ரமணா, ரமணா' என்று கூறினால் இன்பமாக இருக்கிறது சுவாமி! அப்படி நான் கூறிக்கொண்டிருக்கலாமா சுவாமி?" - இப்படி அவர் கேட்கிறார்.

மெய்ப்பொருளை நாடி நிற்பது இப்படித்தான் உள்ளது.

மெய்ப்பொருளை உணர்ந்து கொள்ளும் முயற்சியாகத்தான் நாம் எத்தனையோ தியானம் மற்றும் தவ முயற்சிகளில் ஈடுபடுகிறோம்.

தியானத்தினாலும், தவமுயற்சிகளினாலும் பலன் கிடைத்ததா?

மெய்ப்பொருளை அடைந்து விட்டோமா?

இறை தரிசனம் கிடைத்துவிட்டதா?

தியான - தவமுயற்சிகளின் மூலம், மெய்ப்பொருளையோ, இறைவனையோ நாம் அடைந்திடாவிட்டாலும், அவற்றின் மூலம் நமக்கு நல்லவிதமான பலன்கள் பல கிடைக்கின்றன; அற்புதமான அனுபவங்கள் கிடைக்கின்றன.

ஒரு சராசரி மனிதனுக்கு ஒரு பிரச்சினை ஏற்படுகிறது என்று வைத்துக்கொள்வோம்.

அதிலிருந்து அவன் எப்படி விடுபடுகிறான்?

பக்கத்து வீட்டுக்காரருடன் தகராறு. தொட்டதற்கெல்லாம் அவருடன் பிரச்சினை. நம்மை நிம்மதியாக இருக்கவிட மறுக்கிறார்.

வீட்டைக் காலிசெய்து விட்டு வேறு வீட்டுக்கும் போகமுடியாது. நாம் இருப்பது நமது சொந்த வீடு. நமது வசதிக்கு ஏற்ப அதனை அமைத்திருக்கிறோம்.

அவரையும் அவர் வீட்டிலிருந்து அப்புறப்படுத்த முடியாது. அவரும் அவர் கஷ்டப்பட்டு கட்டிய வீட்டில்தான் குடியிருந்து வருகிறார். தேவையற்ற பிரச்சினையையும், துன்பத்தையும் நாம் அவருக்குக் கொடுப்பதாக அவர் கற்பிதம் செய்து கொள்கிறார். சண்டைபோட்டு நம்மை அடக்கிவிட்டால் நிம்மதியாக இருக்கலாம் என அவர் எண்ணுகிறார்.

அவரால் நம்மை அடக்கமுடியவில்லை. நம்மால் அவரை அடக்கமுடியவில்லை.

விளைவு?

வேறென்ன, நித்தமும் பிரச்சினை தான்; நித்தமும் அதனால் மனவேதனை தான்.

அவரைக் கொலை செய்து விட்டால்?

அத்துடன் எல்லாப் பிரச்சினைகளும் முடிந்துவிடும். நாம் நமது நிரந்தரப் பிரச்சினையிலிருந்து விடுபட்டுவிடலாம்.

இந்த எண்ணம் நமக்கு மட்டுந்தான் ஏற்படுமா?

அடுத்த வீட்டுக்காரருக்கும் இதே எண்ணந்தான் ஏற்படுகிறது. நம்மைக் கொன்றுவிடவேண்டுமென்று அவரும் நினைக்கிறார்.

அவரை நம்மாலும் கொன்றுவிட முடியவில்லை. நம்மை அவராலும் கொன்றுவிட முடியவில்லை.

மனவேதனைக்கு வேறு எப்படித்தான் தீர்வு காணுவது?

ஆல்கஹால் டானிக்குகள் விற்பனையாகின்றன. ஆல்கஹாலின் உதவியை நாடுகிறோம்.

மதுவை அருந்துவதால், தற்காலிகமான, மன ஆறுதல் கிடைக்கிறது. ஆல்கஹாலின் ஆதிக்கம் குறைந்ததும் மீண்டும் மனவேதனை தலையெடுத்துவிடுகிறது.

இந்நிலையில் தான், நமது தவமுயற்சிகளெல்லாம் நமக்குக் கைகொடுக்கின்றன. மதபோதனைகளெல்லாம் நமக்குக் கை கொடுக்கின்றன. நல்ல நம்பிக்கைகளெல்லாம் நமக்குக் கை கொடுக்கின்றன.

தவமுயற்சியில் ஏற்படும் நல்ல அனுபவங்கள் யாவும்

நமக்கு நல்லதொரு மனச் சாந்தியை வழங்குகின்றன.

நல்ல கருத்துக்கள் யாவும், நம்முடைய வாழ்க்கைப் பாதையையே மாற்றி அமைக்கின்றன.

இவை அனைத்தும்

மனிதரை மிருகமாக மாறிவிடாமல் மனிதராக வாழ்ந்திட வகை செய்திடுகின்றன.

இது சாதாரணப் பணியன்று; அரும்பெரும்பணி. இதைத்தான் மகான்களும், இறை அருளாளர்களும் செய்து வருகின்றனர்.

ஆனால் மனிதனின் வாழ்வு, மெய்ப்பொருளை அடையாமலும், இறை தரிசனம் பெறாமலும் முற்றுப் பெறுவதில்லை.

மெய்ப்பொருளை அடைவதுதான் எவ்வாறு? இறை தரிசனம் பெறுவதுதான் எவ்வாறு?

மறைநூல்களும், மகான்களும் சுட்டிக்காட்டும் கடைசி இலக்குதான் இது.

எதை அடைந்தால் வேறு எதனையும் அடையத் தேவையில்லையோ

எதனை அறிந்தால் வேறு எதனையும் அறிந்திட தேவையில்லையோ

- அதுதான் இது.

ஆனால் அதனைச் சாதிப்பதுதான் எவ்வாறு?

மெய்ப்பொருளை உணரவேண்டும், இறை தரிசனம் பெறவேண்டுமென்று எடுத்துக்கூறும், மெய் ஞானிகளும், மறைநூல்களும், அதனை அடைவது எவ்வாறு எனக் கூறுகின்றனரா? கூறுகின்றனவா?

மெய்ப்பொருளை எப்படித்தான் உணர்ந்திடுவது?

இப்போது இன்னுமொரு கேள்வி.

மெய்ப்பொருளை அடைய எண்ணுவது யார்?

மெய்ப்பொருளே மெய்ப்பொருளை அடைய எண்ணுகிறதா?

அல்லது நாம் தான் மெய்ப்பொருளை அடைய எண்ணுகிறோமா?

மெய்ப்பொருள் என்பது தன்னிறைவாக உள்ளது. அதற்கு தன்னை அறியவோ, அடைந்திடவோ அவசியமில்லை. தன்னை அறியவேண்டிய அவசியம் அதற்கு ஏற்படும் பட்சத்தில், அது மெய்ப்பொருளே அல்ல.

அப்படியானால் மெய்ப்பொருளை அடைய விரும்புவது மெய்ப்பொருள் அல்ல. நாம் மட்டுமே மெய்ப்பொருளை அடைய எண்ணுகிறோம்.

மெய்ப்பொருளை அடைய எண்ணும் நாம் யார்?

நாமே மெய்ப்பொருளா, அல்லது நாம் வேறு ஏதாவது ஒன்றா?

நாமே மெய்ப்பொருளாக இருந்திடும் பட்சத்தில், நம்மை நாமே அறிந்திடும் அவசியம் நமக்கு இருக்காது.

அப்படியானால் மெய்ப்பொருளை அறிந்திட முயலும் நாம் யார்? நான் யார்?

நம்மிடம் இயங்கும் மனோ இயக்கத்தின் மூலமாகத்தான் நாம் ஒவ்வொன்றையும் அறிந்திடுகின்றோம்.

நம்மிடம் இயங்கும் மனோ இயக்கந்தான் இன்ப துன்பங்களை அனுபவிக்கின்றது.

நம்மிடம் இயங்கும் மனோ இயக்கந்தான் மெய்ப்பொருளை அறிந்திட முயல்கின்றது.

நமது மனோ இயக்கம், தான் உணர்ந்தறியாத ஒன்றை, உணர்ந்திட முற்படுகின்றது.

நமது மனோ இயக்கம் என்பது என்ன?

நமக்கு சிந்தனைகள் ஏற்படுகின்றன; நமக்கு பயம், வருத்தம், கோபம் போன்ற உணர்ச்சிகள் ஏற்படுகின்றன. இவைதான் மனோ இயக்கம்.

நம்முடைய உணர்வும் அறிவும் கலந்த நிலையைத்தான் மன இயக்கம் எனக் கூறுகிறோம்.

(Consciousness + Intellect = Mind)

தண்ணீரினுள் காற்று வெளிப்படுவதாக வைத்துக்கொள்வோம். தண்ணீர் என்பது உணர்வு அல்லது Consciousness. காற்று என்பது அறிவு அல்லது Intellect. இரண்டும் சேர்ந்த கலவையாக வெளிப்படுவதுதான் நீர்க்குமிழி அல்லது மனோ இயக்கம்.

உணர்வு மட்டும் மனம் அன்று; அறிவு மட்டும் மனம் அன்று; இரண்டும் சேர்ந்த கலவையே மனம். இரண்டும் சேர்ந்ததுதான் நீர்க்குமிழி.

நீர்க்குமிழி என்பது நீரிலேயே தோன்றினாலும், தண்ணீர் வேறு; நீர்க்குமிழி வேறு. நீர்க்குமிழியின் மொத்த அம்சமும் நீரினால் ஆக்கப்பட்டதுதான். காற்றின் கலப்பினால் அது அவ்வாறு ஆகிவிட்டது.

இப்போது, நீர்க்குமிழியும், நீரும் ஒன்றாவது எவ்வாறு? நீர்க்குமிழி, தன்னை நீராக அறிந்துகொள்வது எவ்வாறு?

நீர்க்குமிழிக்கு நீரை அறிந்துகொள்ளவேண்டிய அவசியம் ஏற்படுகிறது. மனதிற்கு மெய்ப்பொருளை அறிந்து கொள்ளவேண்டிய அவசியம் ஏற்படுகிறது.

ஆனால் நீருக்கு, நீரை அறிந்துகொள்ள வேண்டிய அவசியம் எதுவும் கிடையாது.

நீர்க்குமிழி, நீரை அறிந்து கொள்வது எவ்வாறு?

நீர்க்குமிழியானது, தானே நீராக இருப்பதை உணர்ந்து கொள்வதுதான், நீர்க்குமிழி நீரை அறிந்துகொள்வதா?

நீரே நீர்க்குழியாக உள்ளது என்பதை நீர்க்குமிழி அறிந்து கொள்ளும் போது

தன்னை அறியும் தேவையற்ற போராட்டம் நின்று விடுகின்றது.

இது பொய்க்கூற்று கிடையாது. நீர்தான் நீர்க்குழியாக மாறியுள்ளது என்பது நிதர்சனமான உண்மை.

சாஸ்திர வல்லுனர்கள் பலரும் இப்படித்தான் இதனை அணுகுகின்றனர்.

நீர்க்குமிழியானது, தன்னை, 'நீர்' என்று சமாதானப்படுத்திக்கொள்வதால் நீர்க்குமிழி, நீர் ஆகிவிடுவதில்லை.

நீர்க்குமிழியானது, தன்னை 'நீர்' என விசுவாசித்துக்கொள்வதால், அது மேலும் போராடுவதில்லை.

நீர்க்குமிழி, தனது போராட்டத்தை நிறுத்திக் கொண்டதால் அது நீராகிவிடாது. நீர்க்குமிழி என்பது உண்மையில் நீர்க்குமிழி மட்டுமன்று. அது காற்றுக்குமிழியுமாக இருக்கிறது.

மனம் என்பது, மெய்ப்பொருளை அறிய முயலும்போது, அது மெய்ப்பொருளையும்

மனோ அம்சமாகவே எண்ணிக்கொள்கிறது.

நீர்க்குமிழி, தன்னை நீர் என எடுத்துக்கொள்ளும்போது, நீரையும், குமிழியின் தன்மையிலேயே எடுத்துக்கொள்கிறது.

உண்மையில் மனதால் மனதுக்கு அன்னியமாக எதையும் அறியமுடியாது.

மனம் எதை அறிந்தாலும் மனோமயமாக்கியே அறியமுடியும். இங்கு மனம் எதையோ அறிந்து அதனை மனோ மயமாக்கவில்லை. அது தன்னையே, மெய்ப்பொருள் என கருதிக் கொள்கிறது.

உண்மையில் மெய்ப்பொருள் என்பது, நினைப்பும், மறப்பும் அற்றது. அது தன்னை நினைவுப்படுத்தி அறிந்து கொள்ளும் தேவை உடையது அன்று.

மனம், தன்னை சமாதானப்படுத்தும் வழியாக, தன்னை மெய்ப்பொருளாகக் கருதும் பாடம் கொடுக்கப்பட்டுள்ளது.

அப்படியானால், மெய்ப்பொருளை அறிய சாத்தியமே இல்லையா? மெய்ப்பொருளை அறிவதுதான் எவ்வாறு?

உண்மையில்

மெய்ப்பொருளை அறியவேண்டிய எந்த அவசியமும் மனதுக்குக் கிடையாது. அது மெய்ப்பொருளை அறிய நினைக்குந்தோறும்

அது தனது 'மனம்' என்னும் தன்மையையே

மேலும் மேலும் இறுக்கிப்பிடித்துக்கொள்கிறது.

மனம், தன்னிலையில் நிற்பது என்பது

தன்னை மெய்ப்பொருளாகக் கருதுவது அன்று.

மனம், தன்னைக் கடைசிவரையிலும் மனதாகவே கருதுவதுதான் தன்னிலையில் நிற்பது ஆகும்.

நம் மனது என்பது மாயையாகக் கூட இருக்கலாம். அதனால் பாதகம் இல்லை.

மனது என்பது, மாயையான தனது இயல்பைப் புரிந்துகொண்டு, தனது மயக்கும் இயல்பை மனப்பூர்வமாக ஏற்றுக்கொள்வதுதான்

மனம் தன்னிலையில் நிற்பதாகும்.

மனம் மெய்ப்பொருளை நாடி நிற்பது சரியான அணுகுமுறையன்று. அதனால் நமது மயக்கநிலை தான் மேலும் உறுதிப்படுகிறது. மெய்ப்பொருள் என்ற பொருளில், மாயையினையே தேடிவிடுகிறோம்.

மனம், மாயையினை ஏற்று, மாயையிடமே சரணடைவது மட்டுமே சரியான அணுகுமுறை.

இதனால்தான் இராமகிருஷ்ண பரமஹம்சர் அடிக்கடி இவ்வாறு கூறுவார் :

'மகா மாயையினை எவராலும் தாண்டிவிட முடியாது. எவர் மகா மாயையினைச் சரணடைகின்றார்களோ, அவர்களை மட்டுமே மகா மாயை இரட்சித்து மெய்ப்பொருளோடு சேர்க்கிறது'.

நம் மனதில் ஏற்படும் அனைத்து இயக்கங்களும்

தாமாகத் தோன்றி மறையும் தற்காலிக இயக்கமாகக் கருதிடும்போது தான்

நம் மனோ இயக்கமே, தனது தனித்தன்மையை இழந்து, அது கணந்தோறும், புதுமை மாறாமல் இயங்கும் உண்மைப் பிரவாகமாக அமைந்துவிடுகின்றது.

மெய்ப்பொருளை அறியவேண்டுவது முக்கியமன்று. மாயையின்பிடி தளரவேண்டுவது தான் முக்கியம்.



## ?கேள்வி பதில்¿

கேள்வி : பகவத் ஐயாவின் புத்தகத்தின் வாயிலாக மனதைப் பற்றி புரிந்து கொள்வது மட்டுமே நம்மை ஞான நிலைக்கு கொண்டு சேர்க்குமா? ஞான நிலை என்பது என்ன? நாம் ஞான நிலையில்தான் இருக்கிறோம் என்பதை எப்படி உறுதி செய்வது?

பதில் : ஓர் அன்பர் இவ்வாறு கேள்வி எழுப்பினார். "நான் பகவத் ஐயாவின் எல்லாப்புத்தகங்களையும் படித்துவிட்டேன். அந்த புத்தகங்கள் எல்லாவற்றிலும் பெரும்பாலும் ஒரே விசயம்தான் கூறப்பட்டுள்ளதாகத் தோன்றுகிறது. அதாவது நமது மனதை எந்த மாற்றமும் செய்யாமல் அப்படியே நாம் ஏற்றுக்கொள்ளும்படி கூறப்பட்டுள்ளது. மனதில், எல்லாம் தாமாகத் தோன்றி தாமாக மறையும் அவற்றை தீர்வு செய்ய நாம் எந்த முயற்சியும் செய்யத் தேவையில்லை என்பது அழுத்தமாக கூறப்பட்டுள்ளது. மேலும் புற வாழ்விற்குத் தேவையான முயற்சிகளை மேற்கொண்டு வாழ்வை வளப்படுத்திக் கொள்ள வேண்டும் என்று புற விசயத்திற்கு கூறப்பட்டுள்ளது. இப்படித்தான் ஞானிகள் அந்த காலத்தில் இருந்தார்களா? இந்தப் புரிதலே நம்மை ஞானியாக்கி விடுமா?"

அவரிடம் "நீங்கள் ஞான நிலை என்றால் எப்படி இருக்கும் என நினைக்கிறீர்கள்? ஞானிகள் எப்படி இருப்பார்கள் என்ற உங்களுடைய கருத்தைக் கூறுங்கள்" எனக் கேட்டேன்.

அதற்கு அவர், "ஞானி என்றால் எதிர்பாராதவிதமாக ஒரு துக்ககரமான விஷயத்தை கேட்டாலும் எந்த விதமான மனச் சலனமும் படமாட்டார். மன வருத்தமும் படமாட்டார். மேலும் எப்போதும்போல் வழக்கம் போலவே இருப்பார். எந்தக் கலக்கமும் அடையமாட்டார் என்பது எனது கருத்து. மேலும் இப்படிப் பட்ட ஓர் உயர்ந்த நிலைக்கு வருவதற்காகத் தானே நாமும் எல்லா விதமான ஆன்மிகப் பயிற்சி, முயற்சிகளை மேற்கொண்டு வருகிறோம்" எனக்கூறினார்.

அவருக்கு பின்வருமாறு விளக்கம் கொடுக்கப்பட்டது.

நமது வாழ்வில் தினமும் காலை கண் விழித்தது முதல் இரவு கண் உறங்கும் வரை எத்தனையோ நிகழ்ச்சிகள், சம்பவங்கள் நம்மை பாதிக்கின்றன. உதாரணமாக தினசரி வாழ்வில் தினமும் 100 சம்பவத்திற்கு நாம் பாதிப்படைகிறோம் என்றால், அகத்தில் நாம் எந்த முயற்சியும் செய்யத்தேவையில்லை என்பதை நன்றாக புரிந்துகொண்ட நிலையில், நாம் சந்திக்கும் 100 சம்பவத்தில் நாம் பாதிப்படையும் நேரத்திலிருந்து வெளியேறும் நேரம் குறையும். அதாவது ஓர் சம்பவத்தில் 2 மணி நேரம் பாதிக்கப்பட்டுள்ளோம் என்றால் நாம் அதிலிருந்து வெளியேறும் நேரம் 1 3/4, 1 1/2, 1, 3/4, 1/2 என நேரம் படிப்படியாக குறையும். மேலும் நாட்கள் செல்ல செல்ல தினமும் 100 சம்பவத்தில் பாதிக்கப்பட்ட நாம் 90, 80, 70, 60, 50, 40 எனப் பாதிக்கப்படும் சம்பவத்தின் எண்ணிக்கையும் குறையத் தொடங்கும். இப்படி படிப்படியாகத்தான் மாற்றம் நிகழ முடியும்.

ஓர் அம்மா, ஐயாவின் புத்தகங்களின் வழியாகவும், ஆடியோ சிடி வழியாகவும் ஞானத் தெளிவு பெற்ற நிலையில் இருந்தார். அந்த அம்மா நல்ல வசதியான குடும்ப சூழ்நிலையுடன் தன்னுடைய ஒரே செல்ல மகனுடன் இருந்துவந்தார். அந்த மகனும் நல்ல படிப்பு படித்து உயர்ந்த வேலையில் இருந்தார். அந்த மகனுக்கு இன்னும் திருமணம் ஆகவில்லை. அவருக்கு திடீரென உடல்நிலை சரியில்லாமல் போய்விட்டது. டாக்டரிடம் செக்கப் செய்து கொண்டு டெஸ்ட் எடுக்கும் நிலையிலேயே எதிர்பாராதவிதமாக இறந்துவிட்டார்.

ஒரே மகனை இழந்துவிட்டதால் மிகவும் மனமுடைந்த நிலையில் இருந்தார் அந்தத் தாய்.

மகன் இறந்ததை மனம் ஏற்றுக்கொள்ளவில்லை. அகத்தில் ஏற்பட்ட இந்தத் துயரத்திற்கு நாம் ஒன்றுமே செய்யமுடியாது என்ற புரிதல் 7 மணி நேரத்திற்குப் பிறகு ஏற்பட்டது. அதன் பிறகு அகத்துயரத்தை அப்படியே ஏற்றுக்கொண்டு புறத்தில் செய்யும் சடங்குகள், சம்பிரதாயங்கள் என எல்லாவற்றையும் முறைப்படி செய்துமுடித்தார். இங்கு அகத்தில் எவ்வளவு தான் துக்கம் இருந்தாலும், அது சம்பந்தமாக நாம் ஒன்றும் செய்யமுடியாது என்ற தெளிவினால் மீளமுடியாத துயரத்திலிருந்து நடைமுறை வாழ்விற்கு கொஞ்சம் கொஞ்சமாக திரும்பிக்கொண்டிருந்தார் அந்த அம்மா.

இப்படிப்பட்ட ஓர் சம்பவம் சாதாரண ஒரு நபருக்கு ஏற்பட்டிருக்கும் பட்சத்தில், அவர் மனதை எதிர்த்து, தொடர்ந்து எத்தனையோ நாட்கள், மாதங்கள் எனப் போராடி, அவரது உடல்நிலையும் கெட்டு மிகவும் மோசமான நிலையை அடைந்திருப்பார். மேலும், முடிந்து போன சம்பவத்திற்காக எத்தனை முறை அகத்தில் போராடினாலும் அவருக்கு அமைதி ஏற்படுவதற்கு சாத்தியமேயில்லை. புரிந்துகொள்வதால் ஏற்படும் நிலை என்பதை இப்படித்தான் நாம் பார்க்கவேண்டும்.

நாம் ஞானிகள் என்று பார்க்கக் கூடியவர்கள் கூட, உதாரணமாக ஓசோ அவர்கள்கூட, ஒரு சம்பவத்திற்காக மிகவும் அழுததாக அவரே கூறியுள்ளார். இரமண மகரிஷியும் ஒரு சம்பவத்தில் மிகவும் அழுது உள்ளார்கள். மேலும் ஞானிகள் பட்டினத்தார், மாணிக்கவாசகர் என பல மகான்களும் ஒரு சில சம்பவங்களால் பாதிக்கப்பட்டு அழுதுள்ளார்கள் என்பதையும் நாம் நினைவில் கொள்ளவேண்டும்.

இங்கு நாம் தெரிந்துகொள்ள வேண்டியது என்னவென்றால், பாதிக்கப்படும் சம்பவத்திலிருந்து நாம் எவ்வாறு வெளியேறுகிறோம் என்பது மட்டுமே. நமது இயலாமையை புரிந்துகொள்வதால், நடந்து போன சம்பவத்தை முழுமையாக ஏற்றுக்கொண்டு, அதிலிருந்து தானாகவே வெளியேறிவிடுகிறோம். புரிந்து கொள்ளவில்லை என்றால் நம் மனதோடு போராடி உடலையும் கெடுத்துக்கொண்டு துன்பப்படுகிறோம். நம்முடைய புரிந்துகொள்ளாமையே அந்த சம்பவத்திலிருந்து வெளியேறுவதற்கான காலநேரத்தை அதிகரிக்கும். அவ்வளவுதான் வித்தியாசம்.

ஞானி ஒரு சம்பவத்தில் பாதிக்கப்படுவது 'தங்கச் சூடு' என்றும், சாதாரண மனிதன் ஒரு சம்பவத்தில் பாதிக்கப்படுவது 'இரும்புச் சூடு' என்றும் கூறப்படுகிறது. தங்கச்சூடு என்பது தங்கத்தை ஆபரணமாக செய்ய உருக்கி வேலை செய்யும் போது தண்ணீரில் முக்கி எடுத்த உடனேயே அதைத் தொட்டு எடுத்து அடுத்த வேலைக்கு பயன்படுத்தலாம். தங்கத்தில் ஏற்படும் வெப்பம் உடனே மறைந்துவிடும். அதுபோல் ஞானிக்கு ஏற்படும் பாதிப்புகள் உடனே மறைந்துவிடும். இரும்புச் சூடு என்பது இரும்பை பாத்திரம் செய்ய உருக்கி வேலை செய்யும் போது தண்ணீரில் போட்ட உடன் எடுக்க முடியாது. சிறிது நேரம் கழித்துதான் எடுத்து வேலை செய்யமுடியும். ஏனெனில் இரும்பில் ஏற்படும் வெப்பம் குறைய ஆகும் நேரம் அதிகம்.

உண்மையில் நமக்கு ஏற்படும் அனைத்து உணர்வுகளுமே தங்கச் சூடு போன்றவைகள் தான். அவற்றின் ஆயுள் வெறும் மைக்ரோ செகண்டே. நாம் அவற்றோடு போராடும் போது மட்டுமே போராடும் கால அளவிற்கு துயரம் நீடிக்கிறது. அப்போதுதான் இரும்புச் சூடு போல் ஆகிவிடுகிறது.

நாம் நம் மனதோடு முரண்படாமல் அப்படியே ஏற்றுக்கொள்ளும்போது நாட்கள் செல்லச் செல்ல பாதிக்கப்படும் சம்பவத்தின் எண்ணிக்கையும் குறையும். கால அளவும் குறையத்தொடங்கும். இவற்றையெல்லாம் ஏற்றுக்கொள்ளும் தன்மைதான் விடுதலை எனப்படும் ஞானியர் நிலையாகும்.

தன்னோடு முரண்பாடு கொள்ளாதவர்கள் ஞானியர்கள் - தங்கச் சூடு போன்றவர்கள்.

தான் உணர்வுகளோடு முரண்பட்டு கொள்பவர்கள் சாதாரண மனிதர்கள் - இரும்புச் சூடு போன்றவர்கள்.

**V.A.P. சரவணன்,**
சேலம்.
செல் : 99942-05880



2-11-2012 அன்று
சேலம் மையம் திறப்புவிழாவின் போது




14-10-2012 அன்று
திருப்பூர் மையம்
திறப்புவிழாவின் போது

## ஐயாவுடைய நிகழ்ச்சி

| நாள் | நிகழ்ச்சி நடைபெறும் இடம் | பொருள் | நிகழ்ச்சி ஒருங்கிணைப்பாளர் |
|---|---|---|---|
| 08-12-2012<br>சனிக்கிழமை | பெரம்பூர் அன்னதான சமாஜம்,<br>3, மீனாட்சி தெரு,<br>பெரம்பூர் ரயில்வே நிலையம் எதிரில், சென்னை-11. | **சாதாரண மனிதர்களும் ஞானியாகலாம்**<br>மாலை 5-30 to 8-00 மணிவரை | Sri Bagavath Mission, Chennai Centre,Ambattur. - 98840 97438<br>99520 71525 |

## ஆசிரியர் பகுதி

அனைவருக்கும் இந்த சக பயணியின் வணக்கம்,

பகவத் பாதையில் பயணிக்கும் உங்கள் அனைவரையும் இப்பாதையின் மூலம் சந்திப்பதிலும் வரவேற்பதிலும் பெருமகிழ்வு அடைகிறேன்.

சென்ற இதழில் வெளியிடப்பட்ட வேண்டுகோளுக்கு இணங்கி பலரும் நன்கொடைகளையும், சந்தாக்களையும் வழங்கி ஸ்ரீ பகவத் மிஷன் தொண்டில் தங்களையும் இணைத்துக்கொண்டுள்ளார்கள். அவர்கள் அனைவருக்கும் பகவத் மிஷன் சார்பில் மனமார்ந்த நன்றியை தெரிவித்துக்கொள்கிறேன்.

மேலும் ஸ்ரீ பகவத்மிஷனின் புதிய மையங்கள் 14-10-2012 அன்று திருப்பூரிலும், 02-11-2012 அன்று காலை பரமத்திவேலூரிலும், மாலை சேலத்திலும் தொடங்கப்பட்டன. இத்திறப்பு விழாவில் பல அன்பர்கள் கலந்துகொண்டு விழாவினை சிறப்பித்தார்கள். இம் மையங்களின் முகவரிகளும், தொடர்பு எண்களும் இந்த இதழில் கொடுக்கப்பட்டுள்ளன. இம்மையங்களில் ஸ்ரீ பகவத் ஐயாவின் நூல்களும், CD மற்றும் DVDகளும் கிடைக்க ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. அந்தந்த ஊரைச் சேர்ந்த அன்பர்கள் மையங்களோடு தொடர்புகொண்டு சத்சங்கங்களில் கலந்துகொண்டு பயன்பெற வேண்டுகிறோம்.

நமது பகவத் மிஷனில் நமக்கென தனியாக தியானமுறைகளோ, பயிற்சி முறைகளோ கிடையாது. மேலும் இங்கு யாருக்கும் எந்த பயிற்சிகளும் கொடுப்பதும் கிடையாது. இங்கு மெய்ஞானத்தெளிவு பெறுவதற்கான எளிமையான புரிதல் மட்டுமே கொடுக்கப்படுகின்றது. இவ்வுலகில் தியான மற்றும் யோகப் பயிற்சிகளை கற்றுக்கொடுக்கக்கூடிய எத்தனையோ ஆன்மிக அமைப்புகள் இருக்கின்றன. நாம் அவற்றுக்கு எதிரானவர்கள் அல்ல. மேலும் அவைகள் அனைத்தும் மனிதகுலம் உய்வதற்கு தேவையானவைகளே. இருப்பினும் இந்த ஞானப்புரிதலோடு இந்த தியான பயிற்சி முயற்சிகளை செய்வதே முழுமையான பயனைத்தரும்.

எனவே எந்த ஆன்மிக அமைப்பைச் சேர்ந்தவர்களாக இருந்தாலும் அவர்களும் நமது மையங்களோடு தொடர்புகொண்டு பயன் பெறலாம். அவரவர்கள் ஏற்கெனவே இருக்கும் ஆன்மிக அமைப்பிலிருந்து விலகி வந்துதான் பயன் பெறவேண்டும் என்ற கட்டாயம் கிடையாது. எந்த ஆன்மிக அமைப்பில் இருந்தாலும் அதில் இருந்து கொண்டே இந்த ஞானத்தெளிவைப் பெற்று பயன்பெறலாம். இதற்கு எந்தக் கட்டுப்பாடும் கிடையாது. இந்த புரிதல் மிக எளிமையாக இருப்பதால், ஆன்மிகத்தில் ஆரம்ப சாதகர்கள் முதற்கொண்டு பல உயர்ந்த படிநிலைகளை அடைந்தவர்கள் வரை அனைவருமே பயனடையலாம்.

காலங்காலமாக மறைபொருளாக இருந்த இந்த மெய்ஞானம், தற்போது ஸ்ரீ பகவத் ஐயா அவர்களால் எளிமையாக்கப்பட்டுவிட்டது. இம்மெய்ஞான புரிதல் புரிந்து கொள்பவர்கள் அனைவருக்குமே சொந்தமாகிவிடும். எப்படி ஆகாயம் அனைவருக்கும் சொந்தமானதோ அதுபோல் இந்தப்புரிதல் அனைவருக்குமே சொந்தமானது. எனவே எந்த பாகுபாடுமின்றி எல்லோரும் பயனடையுமாறு வேண்டுகிறோம்.

அன்புடன்,

**K.S. ஜீவமணி,** ஆசிரியர்,

செல் : 97891-65555

## கடிதம்

அன்புடன் ஆனந்திற்கு,

செப்டம்பர் மாத இதழில் "ஆத்ம விசாரமும் ஒரு நடிகையின் குரலும்" என்ற உங்கள் கட்டுரையை முன் வைத்துச் சில பகிர்தல்...

ஞானம் பெறுவதற்கு முன் :- பசிக்கும்போது புசித்தேன், தாகத்திற்கு நீர் அருந்தினேன். கானகத்தில் விறகு வெட்டினேன். தூக்கம் வருகையில் துயின்றேன்.

மேற்கண்ட ஜென் கதைக்குப் பல்வேறு விளக்கங்கள் கொடுக்கப்பட்டுள்ளன.

ஐயா சொல்வார். ஞானம் பெறுவதற்கு முன் இந்தச் செயல்களைத் தவிர வேறு ஒரு செயல் இருக்கிறது என்று நினைத்துக் கொண்டிருந்தேன். ஞானம் அடைந்தபின் அப்படியொன்றும் இல்லை என அறிந்தேன் என்று.

நம் வாழ்வில் இருந்து வேறு ஒன்றாக ஆன்மிகம் உள்ளது எனக் காலங்காலமாய் நமக்கு சொல்லப்பட்டிருக்கிறது. அதனால்தான் அதைத் தனியாக அடையவேண்டும் என்ற எத்தனமும் ஏற்படுகிறது. ஆனால் நகரும் வாழ்வின் உயிர்மிக்க இந்த நொடியினின்றும் சிறந்த பிறிதொன்று எப்படி இருக்கமுடியும்?

ஆம். தந்தி வாத்தியத்தின் இசைக் குழைவு, அளிக்கப்படும். பெறப்படும் முத்தம், நாவில் வைக்கும் இனிப்பின் முதல் கரைதல், மழை வருமுன் வாசம் எல்லாமே துய்த்து நுகரப்படும் இறைச் செயல்தானே?

ஆனால் "அடையவேண்டும்" என்ற மனதின் அவாவினால், அதிலிருந்து தப்பிக்க, மறுதலிக்க முயற்சி ஏற்படுகிறது. இவ்வாறெல்லாம் துய்த்து மகிழ்வது தவறு எனக்கூட ஏற்பட்டுவிடுகிறது. (தோழருக்கு முதலில் ஏற்பட்டது போல).

தனியாக அரசன் தனக்குக் கட்டிய கோவிலை விட்டுப் பூசலார் தனக்கு இதயத்தில் கட்டிய கோவிலில் சிவன் குடிபுகுந்தது கூட 'பிறிதொன்று இல்லை' என்பதால்தானோ?

சரிதான். இல்லாத இடத்திற்குச் செல்வதற்கான அலைதல் ஓயும்போது ஆண்ட்ரியாவின் பாடலும், ஆண்டாள் பாசுரமும் ஒன்றுதானே.

அன்புடன், ஸ்ரீராம், திருச்சி

செல் : 94435-29876

## விரைவில்...

## ஸ்ரீ பகவத் ஐயாவின் புதிய நூல் ... ... ...

நூலின் தலைப்பு : **“ஞான வாழ்வின் நடைமுறை யதார்த்தங்கள்”**

பொருள் : ஞானம் என்பதும், முக்தி என்பதும், ஆன்ம சாதகர்கள் பலருக்கும் எட்டாக்கனியாக இருந்து வந்தன. ஐயாவின் நூல்களும், கருத்துகளும், பலருக்கு ஞானத்தெளிவையும், விடுதலையையும் வழங்கியிருக்கின்றன.

அப்படித் தெளிவு பெற்றவர்கள் தற்போது என்ன செய்துகொண்டு இருக்கிறார்கள்?

தற்போது அவர்கள், தங்களுடைய ஞானத் தெளிவிற்கு பிறகு எதிர்கொள்ளும் பிரச்சினைகள் என்ன?

இன்னும் அவர்களுக்கு வழிகாட்டல் தேவைப்படுகிறதா? அல்லது அவர்களே தங்களுக்கு ஒளிவிளக்காக இருக்கிறார்களா?

கட்டுப்பாடு : இது எல்லோரும் கட்டாயம் படிக்கவேண்டிய நூல் என்பதில் சந்தேகமே கிடையாது.

ஆனால் படிப்பவர்களின் நலன் கருதி இந்நூலை, நாங்களே தடை செய்திருக்கின்றோம்.

ஐயாவின் நூல்களைப் படித்து அவரது கருத்துக்களில் தெளிவு பெறாதவர்கள் இப்புதிய நூலைப் படிக்க நேர்ந்தால், தேவையற்ற குழப்பம் ஏற்பட்டுவிடும்.

ஆகவே இந்நூல் கடைகளிலோ, நூல் நிலையங்களிலோ, வலைத் தளங்களிலோ கிடைக்காது.

எங்களது நேரடி கண்காணிப்பில் மட்டுமே இந்நூல் வினியோகம் செய்யப்படும்.

விண்ணப்பிக்கும் முறை : இதற்கான விண்ணப்பப் படிவத்தைப்பெற்று, அதில் கேட்கப்படும் கேள்விகளுக்கு பிறருடைய உதவி இல்லாமல், விண்ணப்பதாரர் மட்டுமே தெளிவான பதில் கொடுக்க வேண்டும்.

விண்ணப்பதாரரின் தகுதியை நிர்ணயம் செய்தபிறகே, இந்த நூலின் பிரதி, விண்ணப்பதாரருக்கு வழங்கப்படும்.

விண்ணப்பத்துடன் நூலுக்கான தொகையை கண்டிப்பாக அனுப்பக்கூடாது.

விண்ணப்பம் ஏற்றுக்கொள்ளப்பட்டு நூல் வினியோகம் செய்யப்படும்போது மட்டுமே, நூலுக்கான தொகையைச் செலுத்தவேண்டும்.

இந்தக் கட்டுப்பாடுகள் அனைத்தும் இந்த ஒரே ஒரு நூலுக்கு மட்டுமே.

ஐயாவின் மற்ற அனைத்து நூல்களையும் நீங்கள் வழக்கம்போல் பெற்றுக்கொள்ளலாம்.

ஐயாவின் மற்ற நூல்களைப் படித்து தெளிவு பெறுவதற்கு முன்னால் இந்த நூலைப் பெற்றிட எவரும் ஆர்வம் காட்டவேண்டாம் என அன்புடன் வேண்டுகிறோம்.

விண்ணப்பங்களை கீழ்க்கண்ட முகவரியில் பெற்றுக்கொள்ளலாம்.




1. ஸ்ரீ பகவத் மிஷன்
31, இராமலிங்கசாமி தெரு, அம்மாப்பேட்டை, சேலம்-636 003.
செல் : 9994205880, 9443290559, 9789165555.

2. ஸ்ரீ பகவத் மிஷன், சென்னை மையம்
23/10, Old Bank of Baroda Street,
Secretariate Colony, Ambattur, Chennai - 600 053.
Cell : 9884097438, 9952071525.

3. ஸ்ரீ பகவத் மிஷன், பரமத்தி வேலூர் மையம்,
270, பொத்தனூர் ரோடு, முருகன் தியேட்டர் எதிரில்,
பரமத்தி வேலூர், நாமக்கல்.
செல் : 9360579181, 9360110755, 9787253751

4, ஸ்ரீ பகவத் மிஷன், திருப்பூர் மையம்
ஸ்ரீ பாலகுமரன் நிட்ஸ்,
40, தட்டான் தோட்டம், 4-வது தெரு,
பல்லடம் ரோடு, திருப்பூர் -4.
செல் : 9944044988, 9442215248, 9865623709

5. ஸ்ரீ பகவத் மிஷன், சேலம் மையம்
அம்ருதா ஹோமியோ கிளினிக்,
8A/189, சரஸ்வதி தெரு, அத்வைத ஆஸ்ரமம் ரோடு,
புதிய பஸ் நிலையம் எதிரில், சேலம்.
செல் : 9488694453, 9894377433, 9443290559

## புதிய வடிவில் “அனுஷ்டான ஆன்மிகம்”

ஆன்மிகத்தில் முயற்சியின் பங்கு என்ன?

முயற்சியைப் பயன்படுத்தி, எவ்வாறு முயற்சி அற்ற நிலைக்கு செல்வது?

இறைவன், ஆன்மா, கர்மா, தியானம், மாயை, யோக சித்திகள் ஆகியவற்றின் அடிப்படை உண்மைகள் என்ன?

- இவை அனைத்தையும் அறிவியல் ரீதியாக எளிய நடையில் விளக்குகிறது இந்நூல்.

மொத்த பக்கங்கள் 448
விலை ரூ. 300/-

## ஜென் கதை
# அனுசரித்து போ

ஒரு நாட்டில் ஓர் ஞானி மிக எளிமையாக வாழ்ந்து வந்தார். மிகக் குறைந்த ஆடை அணிந்து மக்கள் கொடுக்கும் பழைய சாதத்தையும் பருப்புக் கஞ்சியையும் சாப்பிட்டு சாலை ஓரத்தில், தான் உண்டு தன் வேலை உண்டு என மிக எளிமையாக வாழ்ந்து வந்தார்.

அதே நாட்டைச் சேர்ந்த மந்திரி ஒருவர் அரண்மனைக்குச் செல்லும்போது இந்த ஞானியை கவனிப்பது வழக்கம். மந்திரிக்கு அந்த ஞானியின் மீது நல்ல மதிப்பும் மரியாதையும் இருந்தது.

ஒரு சமயம் மந்திரிக்கு ஏதோவொரு பிரச்சினை காரணமாக மனக்குழப்பம் இருந்துவந்தது. அது பல நாட்களாக இருந்து வந்ததால் அதை ஞானியுடன் கலந்து பேசி மனக்குழப்பத்திலிருந்து அமைதி அடைந்தார். தன் மன குழப்பத்தை தெளியவைத்த ஞானிக்கு ஏதாவது உதவி செய்ய வேண்டும் என விரும்பினார்.

மந்திரி ஒரு நாள் ஞானியிடம் "நீங்கள் மட்டும் கொஞ்சம் அரசனை அனுசரித்து போனீர்களேயானால், இந்த பருப்பையும் பழைய சாதத்தையும் சாப்பிடுவதை விட்டுவிட்டு அரசருக்கே உரிய இராஜபோக வாழ்க்கையை வாழலாம். என்ன சொல்லுகிறீர்கள்?" எனக் கேட்டார்.

ஞானி, மந்திரி கூறியதை மிகவும் அமைதியாக கேட்டுவிட்டுப் பிறகு "நீங்கள் மட்டும் பருப்பையும் பழைய சாதத்தையும் கொஞ்சம் அனுசரித்து போனீர்களேயானால், அரசனை அனுசரிக்க வேண்டிய அவசியமே இருக்காது" எனக் கூறினார்.

"நம்மை நாம் அனுசரித்தால் போதும், நாமும் ஞானிதான்"

திரு. செல்வம் அமர்நாத்,
செல் : 99766-71920



ஜென் கதை 'அனுசரித்து போ'



**Book packet** containing printed books

*If undelivered please return to:*




Sri Bagavath Mission

31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu,INDIA.
**V. A. P. Sharavanan : 99942 05880**
**Dr. N. Kailasam : 94432 90559**
**K. S. Jeevamani : 97891 65555**
www.pravaagam.org, www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com

To

Published by Shri. V. A. P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu, India. Printed by Sri Jayavel Press, Gandhi Maidanam, Ammapet, Salem636 003. Editor : Shri. K. S. Jeevamani, Cell : 97891-65555.